2698

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2011 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர(உயர் தர)ப் பரீட்சை, 2011 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2011

ඉතිහාසය I (I කොටස)
வரலாறு I (பகுதி I)
History I (Part I)

25 T I

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
Three hours

சுட்டெண் : ........................

இலங்கை வரலாறு - ஆதி காலம் முதல் கி.பி 1978 வரை

முக்கியம்:

※ இவ்வினாத்தாளில் 40 வினாக்கள் உள்ளன. எல்லா வினாக்களுக்கும் **இவ்வினாப்பத்திரத்தில்** விடை எழுதுக.

※ ஒவ்வொரு வினா தொடர்பாக **ஐவைந்து** விடயங்கள் தரப்பட்டுள்ளன. அவற்றுள் **ஒன்று** சரியானது. ஒரு வினாவின் சரியான விடையைத் தெரிவு செய்தவுடன் அதனை இங்கு குறிப்பிடப்பட்ட **அறிவுறுத்தல்களுக்கமைய** உமது விடையைக் **குறித்துக் காட்டுக.**

※ **இப்பகுதிக்கு 40 புள்ளிகள் வழங்கப்படும்.**

※ உமது விடைத்தாள்களை ஒப்படைக்கும் பொழுது பகுதி I இற்கான விடைகளை எழுதிய பின்னர், பகுதி II இற்கான விடைத்தாளுடன் **இணைத்து ஒப்படைக்க வேண்டும்.** இரண்டு பகுதிகளுக்கும் வழங்கப்பட்டுள்ள நேரம் **மூன்று மணித்தியாலமாகும்.**

## பகுதி I

● **1 - 5** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் **ஐந்து** பெயர்கள் வீதம் தரப்பட்டுள்ளன. அப்பெயர்களுள் **ஒன்று** ஏதோ காரணத்தினால் ஏனையவற்றுடன் **பொருந்தாது. பொருந்தாத** அப்பெயரை இனங்கண்டு அதன் **இலக்கத்தைப் புள்ளிக் கோட்டில்** எழுதுக.

1. (1) மாந்தை (2) மாந்தோட்டம் (3) மஹாவொட்டு
   (4) மஹாபுட்டு (5) மாகம (......)

2. (1) கடம்ப நதி (2) காவேரி நதி (3) கம்பீர நதி
   (4) ஜஜ்ஜர நதி (5) கப்பகந்தர நதி (......)

3. (1) சிலப்பதிகாரம் (2) பட்டினப்பாலை (3) பதிற்றுப்பத்து
   (4) திருவாலங்காடு (5) மணிமேகலை (......)

4. (1) உரோமன் கத்தோலிக்க சமயம் (2) உரோமன் - டச் சட்டம் (3) றாட் ஃபான் ஜஸ்ற்றிற்றி
   (4) லாண்ட்ராட் (5) கொம்மாந்தர் பிரிவு (......)

5. (1) கோல்புறூக் - கமரன் (2) குறூ - மக்கலம்
   (3) மொன்ரேகு - செம்ஸ்ஃபோர்ட் (4) மானிங் - டிவொன்ஷயர்
   (5) டொனமூர் (......)

● **6 - 10** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் **ஐந்து சோடிப் பெயர்கள்** தரப்பட்டுள்ளன. அவற்றுள் ஒரு சோடியிலுள்ள பெயர்கள் ஒன்றுடன் ஒன்று **பொருந்தவில்லை. பொருந்தாத** அச்சோடியை இனங்கண்டு அதன் **இலக்கத்தைப் புள்ளிக் கோட்டில்** எழுதுக.

6. (1) தேவநம்பியதீசன் - சங்கமித்தை
   (2) மகாசேனன் - சங்கமித்திர தேரர்
   (3) சிறிமேகவண்ணன் - ஹேமமாலாவும் தந்தனும்
   (4) முதலாம் உபதிஸ்ஸன் - புத்தகோஷர்
   (5) மகாநாமன் - ஃபா - ஸியான் (......)

7. (1) களுதிய பொக்குண கல்வெட்டு - சங்கத்தாருக்கான விதிகளும் அறிவுறுத்தல்களும்
   (2) வேவல்கட்டிய கல்வெட்டு - கோயில் நிலங்களின் நிர்வாகம் பற்றிய விதிகள்
   (3) பதுளை தூண் கல்வெட்டு - சந்தை நகரமொன்றை நிர்வாகம் செய்வதற்கான விதிகள்
   (4) வெஸ்ஸகிரி கற்பலகைக் கல்வெட்டு - அரசருக்குரிய குளத்திலிருந்து நீர் விநியோகம் செய்வதற்கான விதிகள்
   (5) தோணிகல கல்வெட்டு - ஒரு வணிக சங்கத்திடம் இருப்பு முதலாக வைக்கப்பட்ட தானியம் அல்லது காசு தொடர்பான விதிகள் (......)

[பக். 2 ஐப் பார்க்க

8. (1) குமார தாதுசேனன் - அனகாபதி
(2) முதலாம் விஜயபாகு - கீர்த்தி
(3) இரண்டாம் பராக்கிரமபாகு - பண்டித பராக்கிரமபாகு
(4) நான்காம் விஜயபாகு - போசத் விஜயபாகு
(5) ஐந்தாம் விஜயபாகு - சவுலு விஜயபாகு (......)

9. (1) சிலாபம் சம்மேளம் - விக்டிறர்
(2) தாழ்நாட்டு உற்பத்தியாளர் சங்கம் - சார்ள்ஸ் டீ சொய்சா
(3) இலங்கைத் தேசிய காங்கிரஸ் - பொன்னம்பலம் அருணாசலம்
(4) சிங்கள மகாசபை - எஸ். டபிள்யூ. ஆர். டீ. பண்டாரநாயக்கா
(5) தமிழர் மகாசபை - எஸ். ஜே. வி. செல்வநாயகம் (......)

10. (1) ஃபிரடெரிக் நோர்த் - இராஜகாரியம் ஒழிக்கப்பட்டமை
(2) எட்வேர்ட் பாண்ஸ் - கொழும்பு - கண்டி வீதி அமைக்கப்பட்டமை
(3) ஹென்றி வோர்ட் - வீதி வரி விதிக்கப்பட்டமை
(4) ஹேர்கியூலிஸ் றொபின்சன் - கம்சபாக்கள் புனருத்தாரணம் செய்யப்பட்டமை
(5) வில்லியம் கிரகரி - அருட்காட்சியகம் அமைக்கப்பட்டமை புயுவு (......)

● **11 - 15** வரையுள்ள ஒவ்வொரு வினாவிலும் சில பெயர்கள்/ திகதிகள்/ கூற்றுகள் ஆகியவற்றின் தொகுதிகள் X, Y எனும் நிரல்களில் தரப்பட்டுள்ளன. Y நிரலில் தரப்பட்டுள்ள பெயர்கள் / திகதிகள்/ கூற்றுகள் X நிரலில் தரப்பட்டுள்ளவற்றுடன் ஏதோ ஒரு வகையில் தொடர்புபட்டவை. ஆனால் அவை சரியான தொடர் ஒழுங்கில் தரப்படவில்லை. X நிரலில் உள்ளவற்றை Y நிரலில் உள்ளவற்றுக்கேற்பச் சரியாக ஒழுங்குபடுத்தும்போது கீழே தரப்பட்டுள்ள **ஐந்து** சேர்மானங்களுள் ஒன்று சரியானதாகும். **சரியான** சேர்மானத்தின் **இலக்கத்தைப் புள்ளிக் கோட்டில்** எழுதுக.

11.

| X | Y |
|---|---|
| (i) சமந்த பாசாதிகா | A தம்பதெனியக் காலம் |
| (ii) ஸஸதாவத | B பொலன்னறுவைக் காலம் |
| (iii) சிதத்சங்கரா | C கண்டி மன்னர் காலம் |
| (iv) மயூர சந்தேஸ | D அநுராதபுரக் காலம் |
| (v) மந்தாரம்புர புவத | E கம்பளைக் காலம் |

(1) D A B C E (2) D B A E C (3) B A E D C (4) D B C E A (5) E C A B D (......)

12.

| X | Y |
|---|---|
| (i) சிரிமேகவண்ணன் | A ஹேறப்பிற்றிகமு தூண் கல்வெட்டு |
| (ii) நான்காம் உதயன் | B தேவநகல பாறைக் கல்வெட்டு |
| (iii) முதலாம் விஜயபாகு | C கல்பொத்த சாசனம் |
| (iv) முதலாம் பராக்கிரமபாகு | D பனாக்கடுவச் செப்பேடு |
| (v) நிஸ்ஸங்கமல்லன் | E தோணிக்கல் கல்வெட்டு |

(1) D B A C E (2) E D A B C (3) B D E C A (4) B A D C E (5) E A D B C (......)

13.

| X | Y |
|---|---|
| (i) 1215 | A ஒல்லாந்தர் வெளியேற்றப்பட்டமை |
| (ii) 1521 | B போர்த்துக்கேயர் வெளியேற்றப்பட்டமை |
| (iii) 1658 | C மாகனுடைய படையெடுப்பு |
| (iv) 1796 | D பிரித்தானியருக்கும் கண்டியருக்குமிடையிலான மோதல் |
| (v) 1817 - 18 | E விஜயபாகு கொலை |

(1) B A E C D (2) C E B A D (3) D E C A B (4) B C E A D (5) B A E D C (......)

14.

| X | Y |
|---|---|
| (i) சப்புமல்குமாரன் | A ஸ்ரீவிக்கிரம ராஜசிங்கன் |
| (ii) டிக்கிரி பண்டார | B இரண்டாம் ராஜசிங்கன் |
| (iii) மகா ஆஸ்தான | C ஆறாம் புவனேகபாகு |
| (iv) கோணப்பு பண்டார | D முதலாம் ராஜசிங்கன் |
| (v) கண்ணசாமி | E முதலாம் விமலதர்மசூரியன் |

(1) C D A B E (2) E C A B D (3) C D B E A (4) D B C E A (5) B A E D C (......)

[பக். 3 ஐப் பார்க்க

15. (i) றொபேர்ட் நொக்ஸ் — A இலங்கையில் உள்ள புராதன காலத்து நீர்த்தேக்கங்கள்
(ii) ஃபோப்ஸ் — B இலங்கையினுடனான ஒரு வரலாற்றுத் தொடர்
(iii) எமேர்ஸன் ரெனன்ற் — C இலங்கையில் ஐம்பது வருடங்கள்
(iv) தொமஸ் ஸ்கின்னர் — D இலங்கை
(v) ஆர். எல். புறோஹியர் — E இலங்கையில் பதினொரு வருடங்கள்

(1) E B D C A (2) B A D E C (3) C A D E B (4) D B C E A (5) B E D C A (......)

- **16 - 20** வரையுள்ள ஒவ்வொரு வினாவின் சரியான விடையைத் தெரிவு செய்து அதன் **இலக்கத்தைப்** புள்ளிக் கோட்டில் எழுதுக.

16. மேல்வரும் பட்டியல்களுள் எது இலங்கை மீது நடைபெற்ற தென்னிந்தியப் படையெடுப்புகளைச் சரியான காலக்கிரம வரிசையில் குறிப்பிடுகின்றது ?
(1) சேனனும் குத்திகனும், எல்லாளன், ஐந்து தமிழர், ஏழு தமிழர், முதலாம் ராஜராஜன்
(2) சேனனும் குத்திகனும், எல்லாளன், ஏழு தமிழர், ஐந்து தமிழர், முதலாம் ராஜராஜன்
(3) எல்லாளன், சேனனும் குத்திகனும், ஐந்து தமிழர், ஏழு தமிழர், முதலாம் ராஜராஜன்
(4) எல்லாளன், சேனனும் குத்திகனும், முதலாம் ராஜராஜன், ஐந்து தமிழர், ஏழு தமிழர்
(5) சேனனும் குத்திகனும், எல்லாளன், முதலாம் ராஜராஜன், ஐந்து தமிழர், ஏழு தமிழர் (......)

17. மேல்வரும் பட்டியல்களில் எது குளங்களின் பெயர்களை அவற்றின் காலக்கிரம வரிசையிற் கொண்டுள்ளது ?
(1) அபய வாவி, மின்னேரிய வாவி, நாச்சாதுவ வாவி, கலா வாவி, பராக்கிரம சமுத்திரம்
(2) அபய வாவி, கலா வாவி, மின்னேரிய வாவி, நாச்சாதுவ வாவி, பராக்கிரம சமுத்திரம்
(3) நாச்சாதுவ வாவி, அபய வாவி, கலாவாவி, மின்னேரிய வாவி, பராக்கிரம சமுத்திரம்
(4) கலா வாவி, அபய வாவி, நாச்சாதுவ வாவி, மின்னேரிய வாவி, பராக்கிரம சமுத்திரம்
(5) அபய வாவி, நாச்சாதுவ வாவி, மின்னேரிய வாவி, கலா வாவி, பராக்கிரம சமுத்திரம் (......)

18. மேல்வரும் பட்டியல்களில் எது யாழ்ப்பாண இராச்சியத்து அரசர்களின் பெயர்களைச் சரியான காலக்கிரம வரிசையில் குறிப்பிடுகின்றது ?
(1) பரராஜசேகரம், புவிராச பண்டாரம், எதிர்மன்னசிங்கம், கனகசூரிய சிங்கையாரியன், சங்கிலி II
(2) கனகசூரிய சிங்கையாரியன், பரராஜசேகரம், சங்கிலி II, புவிராச பண்டாரம், எதிர்மன்னசிங்கம்,
(3) கனகசூரிய சிங்கையாரியன், பரராஜசேகரம், புவிராச பண்டாரம், எதிர்மன்னசிங்கம், சங்கிலி II
(4) கனகசூரிய சிங்கையாரியன், புவிராச பண்டாரம், பரராஜசேகரம், எதிர்மன்னசிங்கம், சங்கிலி II
(5) புவிராச பண்டாரம், கனகசூரிய சிங்கையாரியன், பரராஜசேகரம், எதிர்மன்னசிங்கம், சங்கிலி II (......)

19. மேல்வருவனவற்றுள் எந்தப் பட்டியல் இலங்கையில் உள்ள அரசியல் கட்சிகளின் ஆரம்பம் தொடர்பான காலக்கிரம வரிசையைச் சரியாகக் குறிக்கின்றது ?
(1) லங்கா சமசமாஜக் கட்சி, இலங்கைத் தொழிற் கட்சி, கொமியூனிஸ்ட் கட்சி, ஐக்கிய தேசிய கட்சி, ஸ்ரீலங்கா சுதந்திரக் கட்சி
(2) லங்கா சமசமாஜக் கட்சி, கொமியூனிஸ்ட் கட்சி, இலங்கைத் தொழிற் கட்சி, ஸ்ரீலங்கா சுதந்திரக் கட்சி, ஐக்கிய தேசிய கட்சி,
(3) கொமியூனிஸ்ட் கட்சி, லங்கா சமசமாஜக் கட்சி, இலங்கைத் தொழிற் கட்சி, ஐக்கிய தேசிய கட்சி, ஸ்ரீலங்கா சுதந்திரக் கட்சி
(4) இலங்கைத் தொழிற் கட்சி, லங்கா சமசமாஜக் கட்சி, கொமியூனிஸ்ட் கட்சி, ஐக்கிய தேசிய கட்சி, ஸ்ரீலங்கா சுதந்திரக் கட்சி
(5) கொமியூனிஸ்ட் கட்சி, இலங்கைத் தொழிற் கட்சி, லங்கா சமசமாஜக் கட்சி, ஐக்கிய தேசிய கட்சி, ஸ்ரீலங்கா சுதந்திரக் கட்சி (......)

20. மேல்வருவனவற்றுள் இலங்கை சுதந்திரம் அடைந்த பின் பதவி வகித்த பிரதமர்களின் பெயர்களைச் சரியான காலக்கிரம வரிசையில் குறிப்பிடுவது யாது ?
(1) டட்லி சேனாநாயக்க, D. S. சேனாநாயக்க, ஜோன் கொத்தலாவல, S. W. R. D. பண்டாரநாயக்க, W. தகநாயக்க
(2) D. S. சேனாநாயக்க, டட்லி சேனாநாயக்க, ஜோன் கொத்தலாவல, S. W. R. D. பண்டாரநாயக்க, W. தகநாயக்க
(3) D. S. சேனாநாயக்க, டட்லி சேனாநாயக்க, S. W. R. D. பண்டாரநாயக்க, ஜோன் கொத்தலாவல, W. தகநாயக்க
(4) D. S. சேனாநாயக்க, S. W. R. D. பண்டார நாயக்க, டட்லி சேனாநாயக்க, ஜோன் கொத்தலாவல, W. தகநாயக்க
(5) D. S. சேனாநாயக்க, ஜோன் கொத்தலாவல, W. தகநாயக்க, S. W. R. D. பண்டாரநாயக்க, டட்லி சேனாநாயக்க (......)

[பக். 4 ஐப் பார்க்க

2608

- 21 - 25 வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் ஐந்து கூற்றுக்கள் தரப்பட்டுள்ளன. அவற்றில் ஒன்று தலைப்புடன் பொருந்தாது. பொருந்தாத கூற்றின் இலக்கத்தை தெரிவு செய்து அதன் இலக்கத்தைப் புள்ளிக் கோட்டில் எழுதுக.

21. ராஜரட்டையிற் சோழர் ஆதிக்கம்
   (1) முதலாம் இராஜேந்திரன் இலங்கை மீது படையெடுத்துச் சென்று ஐந்தாம் மகிந்தனைக் கைப்பற்றி இந்தியாவிற்குச் சிறைப்படுத்திச் சென்றான்.
   (2) பொலன்னறுவை சோழ நிருவாகத்தின் தலைமை நிலையமாகும்.
   (3) சோழர் ஆட்சியில் அடங்கிய இலங்கைப் பிரதேசங்கள் மும்முடி சோழ மண்டலம் என்னும் நிர்வாகப் பிரிவாக அமைந்தன.
   (4) சோழர் ஆட்சியிலே, திருகோணமலையிலுள்ள வெல்கம்வேரம் ராஜராஜ பெரும்பள்ளி என்று குறிப்பிடப்பெற்றது.
   (5) கலிங்க மாகன் சோழரை இலங்கையிலிருந்து துரத்திவிட்டு ரஜரட்டையில் ஆட்சி புரிந்தான். (......)

22. பொலன்னறுவையின் பொருளாதாரம்
   (1) அநுராதபுர காலத்தில் உற்பத்தியான நீர்ப்பாசன முறை பொலன்னறுவைக் காலத்தில் உன்னத வளர்ச்சி அடைந்தது.
   (2) பொலன்னறுவைக் காலத்திற் பிரமாண்டமான குளங்களை அமைத்த பெரு மன்னன் நிஸ்ஸங்கமல்லன் ஆவான்.
   (3) தோப்ப வாவி, தும்புதுலு வாவி, எறமுது வாவி ஆகியவற்றை இணைத்துப் பராக்கிரம சமுத்திரம் உருவாக்கப்பட்டது.
   (4) வெளிநாட்டு வாணிபத்தில் ஏற்பட்ட தகராற்றின் காரணமாகவே முதலாம் பராக்கிரமபாகு பர்மா மீது படையெடுத்தான்.
   (5) பொலன்னறுவைக் காலத்தில் வாணிபம் நடைபெற்ற முக்கியமான துறைமுகங்களில் ஊராத் துறையும் ஒன்றாகும். (......)

23. கண்டி இராச்சியம்
   (1) சேனா சம்மத விக்கிரமபாகுவைக் கண்டி இராச்சியத்தின் ஸ்தாபகன் என்று கொள்வர்.
   (2) போர்த்துக்கேயர் டோனா கதரீனாவை யாமசிங்க பண்டாரனுக்குத் திருமணஞ் செய்து வைத்த பின்னர் அவளைக் கண்டியில் அரச பதவி பெறச் செய்தனர்.
   (3) பெட்றோ டீ சூசாவின் தலைமையில் நடைபெற்ற போர்த்துக்கேயரின் படையெடுப்பை 1594 இலே தோற்கடித்த பின் விமலதர்மசூரியன் கண்டி இராச்சியத்திலே தனது அதிகாரத்தைப் பலப்படுத்திக் கொண்டான்.
   (4) இரண்டாம் இராஜசிங்கனால் ஒல்லாந்தரின் இராணுவ உதவியுடன் போர்த்துக்கேயரை இலங்கையில் இருந்தும் வெளியேற்ற முடிந்தது.
   (5) கண்டி இராச்சியத்தின் சிங்கள மன்னரின் வரிசையில் ஸ்ரீவீரபராக்கிரம நரேந்திரசிங்கன் இறுதி அரசனாவான். (......)

24. பிரித்தானியருக்கு எதிரான 1848 ஆம் ஆண்டுக் கிளர்ச்சி
   (1) இந்தக் கிளர்ச்சி ஏற்பட்ட பொழுது எமேர்ஸன் ரெனன்ற் இலங்கையிலே பிரித்தானிய தேசாதிபதியாக இருந்தார்.
   (2) புதிய வரிகளை அரசாங்கம் விதித்தமை கிளர்ச்சிக்கு ஏதுவான உடனடிக் காரணமாகும்.
   (3) மாத்தளை, குருநாகல் ஆகியனவே கிளர்ச்சி ஏற்பட்ட இடங்களிற் பிரதானமானவை.
   (4) புராணப்பு, கொங்காலேகொட பண்டா என்போர் கிளார்ச்சியாளரின் பிரதானமான தலைவர்கள் ஆவர்.
   (5) இந்தக் கிளர்ச்சியின் விளைவாக இலங்கை மக்கள் மீதான பிரித்தானியரின் கொள்கையில் 1850இன் பின் ஒரு மாற்றம் ஏற்பட்டது. (......)

25. 1956 ஆம் ஆண்டுப் பொதுத் தேர்தல்
   (1) இது சுதந்திரத்திற்குப் பின் நடந்த இரண்டாவது பொதுத் தேர்தலாகும்.
   (2) பிரதிநிதிகள் சபையில் 101 அங்கத்தவர்கள் இருந்தனர்.
   (3) தேர்தலில் வெற்றி பெற்ற மகாஜன எக்சத் பெரமுன S. W. R. D.பண்டாரநாயக்கா தலைமையில் ஒரு புதிய அரசாங்கத்தை அமைத்தது.
   (4) தேர்தலுக்குப் பின்பு J. R. ஜெயவர்த்தன எதிர்கட்சித் தலைவரானார்.
   (5) சிங்களத்தை அரசகருமமொழியாக்க வேண்டும் என்ற கோரிக்கை தேர்தல் காலத்து பிரதானமான சுலோகங்களில் ஒன்று. (......)

[பக். 5 ஐப் பார்க்க

● **26 - 30** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றுக்கும் **(A), (B), (C), (D)** என்னும் நான்கு மாற்று விடைகள் தரப்பட்டுள்ளன. அவற்றுள் **ஒன்று அல்லது** பல **சரியான** விடைகளாகும். சரியான விடையை அல்லது விடைகளைத் தெரிவு செய்து

**(A)** யும் **(B)** யும் மட்டும் சரியாயின் ........... **1** எனவும்
**(B)** யும் **(C)** யும் மட்டும் சரியாயின் ........... **2** எனவும்
**(C)** யும் **(D)** யும் மட்டும் சரியாயின் ........... **3** எனவும்
**(A)** யும் **(C)** யும் மட்டும் சரியாயின் ........... **4** எனவும்

**ஒரு** விடை மட்டும் அல்லது **இரண்டிற்கு** மேற்பட்ட விடைகள் சரியாயின் ........... **5** எனவும் **புள்ளிக் கோட்டில்** எழுதுக.

| அறிவுறுத்தல்களின் சுருக்கம் | | | | |
|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 |
| **(A)** யும் **(B)** யும் மட்டும் சரி | **(B)** யும் **(C)** யும் மட்டும் சரி | **(C)** யும் **(D)** யும் மட்டும் சரி | **(A)** யும் **(C)** யும் மட்டும் சரி | **ஒரு** விடை மட்டும் அல்லது **இரண்டிற்கு** மேற்பட்ட விடைகள் சரி |

26. மேல்வருவனவற்றுள் இலங்கை வரலாற்றைச் செல்வாக்குப்படுத்திய புவியியற் காரணங்கள் யாவை ?
(A) இலங்கை 65 620 சதுரக்கிலோமீற்றர் புவியியற் பரப்பளவு கொண்ட ஒரு தீவாகும்.
(B) அது இந்தியாவிலிருந்து வேறுபடுத்தப்பட்ட ஒரு தீவாக அமைந்திருப்பதால் தனக்கெனத் தனியான நாகரிகத்தை வளர்த்துக்கொள்ள முடிந்தது.
(C) இலங்கை இந்தியாவிற்கு அண்மையில் இருப்பதால் அதன் பண்பாட்டில் இந்தியச் செல்வாக்குகளைக் காணமுடிகின்றது.
(D) இலங்கை இந்துசமுத்திரத்தின் நடுவில் அமைந்திருப்பதால் கிழக்கு மேற்கு வணிபத்தில் அது ஒரு முக்கியமான மையப் பகுதியாகும். (......)

27. யாழ்ப்பாண இராச்சியத்தைப் பெறுத்தவரையில் மேல்வரும் கூற்றுகளில் எது/ எவை சரியானது/ சரியானவை ?
(A) யாழ்பாண வைபமாலை, செகராசசேகர மாலை என்பன யாழ்ப்பாண இராச்சியத்தின் வரலாற்றைப் படிப்பதற்கான இரு பிரதானமான மூலங்களாகும்.
(B) விஜய கூழங்கை என்பவனே யாழ்ப்பாண இராச்சியத்தின் முதலாவது அரசன் என்று கொள்ளப்படும்.
(C) யாழ்ப்பாணத்தின் முதலரசர்கள் சோழப் பேரரசின் மண்டலாதிபர்கள் ஆவர்.
(D) 1617 ஆம் ஆண்டு பரராசசேகரனைக் கொன்று விட்டு போர்த்துக்கேயர்கள் யாழ்ப்பாண இராச்சியத்தைக் கைப்பற்றினார்கள் (......)

28. பதினாறாம் நூற்றாண்டு கோட்டை இராச்சியத்தைக் கைப்பற்றிய மேல்வரும் குறிப்புகளில் எது/ எவை சரியானது/ சரியானவை ?
(A) 1521 ஆம் ஆண்டு நடைபெற்ற விஜயபாகு கொலையின் விளைவாகக் கோட்டை இராச்சியம் மூன்று பகுதிகளாகப் பிரிக்கப்பட்டது.
(B) றைகம பண்டாரன் இறந்த பின்பு அவனுடைய நிலப் பகுதிகளை ஏழாம் புவனேகபாகு கோட்டை இராச்சியத்தோடு இணைத்து விட்டான்.
(C) போர்த்துக்கேயர் 1565 இல் தர்மபாலனைக் கொழும்புக்கு அழைத்துச் சென்ற பின் கோட்டை இராசதானி என்ற நிலையை இழந்தது.
(D) ஏழாம் புவனேகபாகு கத்தோலிக்க சமயத்தைத் தழுவிய முதலாவது கோட்டை அரசனாவான். (......)

29. கண்டி இராச்சியத்திற்கும் ஒல்லாந்தருக்கும் இடையிலான உறவுகள் தொடர்பாக, மேல்வரும் கூற்றுகளுள் எது/ எவை சரியானது/ சரியானவை ?
(A) முதலாம் விமலதர்ம சூரியன் ஸ்பில்பேர்கனுடன் செய்துகொண்ட உடன்படிக்கையே கண்டி இராச்சியம் அந்நிய தேசமொன்றுடன் ஏற்படுத்திய முதலாவது ஒப்பந்தாகும்.
(B) கீர்த்தி ஸ்ரீ இராஜசிங்கனது ஆட்சியில் உபசம்பதா சடங்கினை செய்வதற்குச் சீயம் தேசத்திலிருந்து பிக்குமாரைக் கொண்டுவருவதற்கு ஒல்லாந்தர்கள் உதவி புரிந்தனர்.
(C) 1766 ஆம் ஆண்டு உடன்படிக்கையில் இலங்கை முழுவதிலும் ஒரு காவதம் அகலமான கரையோரப் பகுதியை ஒல்லாந்தருக்கு விட்டுக்கொடுப்பதற்கு கண்டி அரசன் உடன்பட்டான்.
(D) 1760 ஆம் ஆண்டில் கீர்த்தி ஸ்ரீராஜசிங்கனுக்கு எதிராகக் கண்டி பிரதானிகள் ஈடுபட்ட சூழ்ச்சியின் பிரதானமான குறிக்கோள் கண்டி இராச்சியத்தை ஒல்லாந்தருக்குக் கையளிப்பதாகும். (......)

30. பத்தொன்பதாம் நூற்றாண்டின் பின்னரைப் பகுதியில் ஏற்பட்ட பண்பாட்டு மறுமலர்ச்சி தொடர்பான மேல்வரும் கூற்றுகளுள் எது/ எவை சரியானது/ சரியானவை ?
(A) இந்து மறுமலர்ச்சி ஆறுமுகநாவலரின் தலைமையில் ஏற்பட்டது.
(B) பிரித்தானிய காலனித்துவ அரசாங்கத்தின் ஆதரவிற் பிரிவெனாக்கள் அமைக்கப்பட்டன.
(C) பிரித்தானிய சமய ஞான சங்கத்தினாற் பல பௌத்த பாடசாலைகள் அமைக்கப்பட்டன.
(D) சித்திலெவ்வை ஏற்படுத்திய முஸ்லிம் கல்விக் கழகத்தின் தலைவராகக் கேணல் ஹென்றி ஸ்டீல் ஒல்கொட் விளங்கினார். (......)

[பக். 6 ஐப் பார்க்க

● **31 - 35** வரையுள்ள எல்லா வினாக்களிலும் சரியான விடையைத் தெரிவு செய்து அதன் **இலக்கத்தைப் புள்ளிக் கோட்டின் மீது** எழுதுக.

31. விஜிதபுரவில் நடந்த போர் எந்த மன்னர்களுக்கிடையிலானது ?
   (1) சேனன் - குத்திகன், சூரதிஸ்ஸன்   (2) எல்லாளன், துட்டகாமினி
   (3) பீதியன், வட்டகாமினி   (4) குட்டபாரிந்த, தாதுசேனன்
   (5) காலிங்கமாகன், மூன்றாம் விஜயபாகு   (......)

32. புத்தகோஷர் எவனுடைய ஆட்சிக் காலத்தில் இலங்கைக்கு வந்தார் ?
   (1) மகாநாமன்   (2) புத்ததாஸ   (3) முதலாம் உபதிஸ்ஸ
   (4) கித்சிரிமேவன்   (5) முதலாம் அக்கபோதி   (......)

33. கவிசிலுமின என்ற நூலின் ஆசிரியர் யார் ?
   (1) வேதேஹ தேரர்   (2) அநோமதஸி   (3) இரண்டாம் பராக்கிரமபாகு
   (4) தர்மசேன தேரர்   (5) புத்தபுத்திர தேரர்   (......)

34. முஸ்லிம் நேசன் என்பது
   (1) முஸ்லிம்களுக்கான தமிழ்மொழிப் பத்திரிகை   (2) ஒரு முஸ்லிம் நிறுவனம்
   (3) ஒரு இஸ்லாமிய சமய நூல்   (4) ஒரு இஸ்லாமிய சட்டம்
   (5) ஒரு முஸ்லிம் பாடசாலை   (......)

35. தனியார் பாடசாலைகள் யாருடைய ஆட்சியில் அரசாங்கத்தாற் பெறுப்பேற்கப்பட்டன ?
   (1) D. S. சேனநாயக்க   (2) டட்லி சேனநாயக்க   (3) S. W. R. D. பண்டாரநாயக்க
   (4) W. தகநாயக்க   (5) திருமதி ஸ்ரீமாவோ பண்டாரநாயக்க   (......)

● **36 - 40** வரையுள்ள வினாக்களில் இரண்டு கூற்றுகள் வீதம் தரப்பட்டுள்ளன. ஒவ்வொரு வினா தொடர்பாகவும் உள்ள கூற்றுச் சோடிக்குக் கீழே உள்ள அட்டவணையில் காணப்படும் **1, 2, 3, 4, 5** என்பவற்றில் மிகவும் பொருந்துவது எதுவென்பதைத் தெரிந்து **அதன் இலக்கத்தைப் புள்ளிக் கோட்டில்** எழுதுக.

அட்டவணை

| | முதலாம் கூற்று | இரண்டாம் கூற்று |
|---|---|---|
| 1. | சரியானது | பிழையானது |
| 2. | சரியானது | சரியானது |
| 3. | பிழையானது | பிழையானது |
| 4. | பிழையானது | சரியானது |
| 5. | சரியானது | சரியானதும், முதலாம் கூற்றினை நன்றாக விளக்குவதுமாகும். |

| | முதலாம் கூற்று | இரண்டாம் கூற்று | |
|---|---|---|---|
| 36. | இலங்கை வரலாற்று நூல்களிலே தீபவம்சம் மிகவும் பழமையானது. | தீபவம்சம் அபயகிரி விகாரத்து வரலாற்று நூல் ஆகும். | (......) |
| 37. | லீலாவதி நிஸ்ஸங்கமல்லனின் பட்டத்தரசி ஆவாள். | மிகக் கூடிய சாசனங்களை நிறுவிய அரசன் நிஸ்ஸங்கமல்லன் ஆவான். | (......) |
| 38. | சுதேச நிர்வாக முறையைப் பயன்படுத்திய ஒல்லாந்தர் தங்களுடைய தேவைகளுக்கேற்ப அதன் அமைப்பினை மாற்றிக்கொண்டனர். | ஒல்லாந்தர்கள் திசாவனி ஒவ்வொன்றினதும் மரபுவழியான கோறளை, பத்து, ஊர் என்னும் பிரிவுகளைத் தொடர்ந்து பேணினார்கள். அவற்றில் முறையே முதலியார், கோறாளை, அத்துக்கோறாளை என்போர் பிரதானமான நிர்வாக அதிகாரிகளாக இருந்தனர். | (......) |
| 39. | தமிழர்களுடைய சட்டங்களையும் வழமைகளையும் தேச வழமையில் ஒல்லாந்தர் தொகுத்தனர். | உயர்நீதிமன்றத்தில் வன்முறை தொடர்பான வழக்குகளை யூரிமார் மூலம் விசாரணை நடத்துவதை 1810 ஆம் ஆண்டு நிதிப் பிரகடனம் அறிமுகப் படுத்தியது. | (......) |
| 40. | கச்சிமரைக்காரை ஒரு முகாந்திரமாக நியமித்ததன் விளைவாக 1915 ஆம் ஆண்டு சிங்கள - முஸ்லிம் கலவரங்கள் ஏற்பட்டன. | சேர். பொன்னம்பலம் இராமநாதன் இலங்கை தேசிய காங்கிரஸின் முதலாவது தலைவராவார். | (......) |

❊❊

[பக். 7 ஐப் பார்க்க

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

0733

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2011 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர(உயர் தர)ப் பரீட்சை, 2011 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2011

ඉතිහාසය II (I කොටස)
வரலாறு II (பகுதி I)
History II (Part I)

25-A T II

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
Three hours

இந்திய வரலாறு - ஆதி காலம் முதல் கி.பி 1206 வரை

சுட்டெண் : ......................

அறிவுறுத்தல்கள்:

※ இவ்வினாத்தாளில் 40 வினாக்கள் உள்ளன. **எல்லா** வினாக்களுக்கும் **இவ்வினாப்பத்திரத்தில்** விடை எழுதுக.

※ ஒவ்வொரு வினா தொடர்பாகவும் **ஐவைந்து** விடைகள் தரப்பட்டுள்ளன. அவற்றுள் **ஒன்று** சரியானது.

※ ஒரு வினாவுக்கு உரிய சரியான விடையைத் தெரிவு செய்த பின் அதனை இப்பத்திரத்திலே **அறிவுறுத்தல்களுக்கமைய** குறிப்பிடுக.

※ **இவ்வினாப்பத்திரத்திற்கு 40 புள்ளிகள் வழங்கப்படும்.**

※ உமது விடைத்தாள்களை ஒப்படைக்கும் பொழுது பகுதி I இற்கான விடைகளை எழுதி பின்னர், பகுதி II இற்கான விடைத்தாளுடன் **இணைத்து ஒப்படைக்க வேண்டும்.** இரண்டு பகுதிகளுக்கும் வழங்கப்பட்டுள்ள நேரம் **மூன்று மணித்தியாலமாகும்.**

## பகுதி I

● **1 - 10** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் **ஐந்து** பெயர்கள் வீதம் தரப்பட்டுள்ளன. அப்பெயர்களுள் **ஒன்று** ஏதோ காரணத்தினால் ஏனையவற்றுடன் **பொருந்தாது. பொருந்தாத** அப்பெயரை இனங்கண்டு அதன் **இலக்கத்தைப் புள்ளிக் கோட்டில்** எழுதுக.

1. (1) பரோடா (2) போலான் (3) காரகோரம் (4) கைபர் (5) மக்ரான் (......)

2. (1) பாரத வருஷம் (2) பாரத தேசம் (3) இந்துஸ்தான் (4) ஜம்புத்துவீபம் (5) சப்த சிந்து (......)

3. (1) சம்பா (2) அஸ்மக (3) உஜ்ஜயினி (4) ஸிராவஸ்தி (5) கௌசாம்பி (......)

4. (1) வாதாபிகொண்ட (2) விக்கிரமாதித்திய (3) பரமபட்டாரக (4) மகாராஜாதிராஜ (5) பரம பாகவத (......)

5. (1) காளிதாஸர் (2) பாணபட்டர் (3) சூத்திரகர் (4) பாஷர் (5) விசாகதத்தர் (......)

6. (1) மகாநதி (2) நர்மதா (3) கோதாவரி (4) கிருஷ்ணா (5) காவேரி (......)

7. (1) பக்திரிய – கிரேக்கர் (2) சகர் (3) பார்த்தியர் (4) வாகாடகர் (5) குஷாணர் (......)

8. (1) மகேந்திரவர்மன் (2) நரசிம்ஹவர்மன் (3) பரமேஸ்வரவர்மன் (4) யசோவர்மன் (5) நந்திவர்மன் (......)

9. (1) காஞ்சிபுரம் (2) தஞ்சாவூர் (3) மாமல்லபுரம் (4) மதுரை (5) சோமநாதபுரம் (......)

10. (1) சோழர் (2) சேரர் (3) பாண்டியர் (4) வாகாடகர் (5) பல்லவர் (......)

[பக். 2 ஐப் பார்க்க

● **11 - 15** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் **ஐந்து சோடிப்** பெயர்கள் தரப்பட்டுள்ளன. அவற்றுள் **ஒரு** சோடியிலுள்ள பெயர்கள் ஒன்றுடனொன்று **பொருந்தவில்லை. பொருந்தாத** அச்சோடியைத் தெரிந்து அதன் **இலக்கத்தைப் புள்ளிக் கோட்டின் மீது** எழுதுக.

11. (1) பிராச்சிய - பாடலிபுரம்
(2) அவந்தி - உஜ்ஜயினி
(3) கலிங்கம் - தௌலி
(4) தக்ஷிணாபதம் - சுவர்ணகிரி
(5) உத்தராபதம் - தக்ஷசீலம் (......)

12. (1) பித்தாரி - முதலாம் சந்திரகுப்தன்
(2) ஜௌகத - அசோகன்
(3) ஜூனகார் - ருத்திரதாமன்
(4) ஐஹொளே - இரண்டாம் புலிகேசி
(5) ஹாத்திகும்பா - காரவேலன் (......)

13. (1) குஸிநார - மல்ல
(2) வைசாலி - லிச்சவி
(3) மதுரா - சூரசேன
(4) தக்ஷசீலம் - காந்தாரம்
(5) பாஞ்சாலம் - குரு (......)

14. (1) தேவநபிய பியதஸி - அசோகன்
(2) மஹேந்திராதித்ய - முதலாம் குமாரகுப்தன்
(3) பரமேஸ்வர - இரண்டாம் புலிகேசி
(4) ராஜபுத்ர - ஹர்ஷன்
(5) கங்கைகொண்ட சோழன் - முதலாம் இராஜராஜன் (......)

15. (1) கோசலாதேவி - பிம்பிசாரன்
(2) ராஜ்ய ஸ்ரீ - கிரஹவர்மன்
(3) தத்ததேவி - சமுத்ரகுப்தன்
(4) மோரா - அசோகன்
(5) துருவதேவி - இரண்டாம் சந்திரகுப்தன் (......)

● **16 - 20** வரையுள்ள ஒவ்வொரு வினாவிலும் சில பெயர்கள்/ திகதிகள்/ கூற்றுகள் என்பவற்றின் தொகுதிகள் X, Y என்னும் நிரல்களில் தரப்பட்டுள்ளன. Y நிரலில் தரப்பட்டுள்ள பெயர்கள்/ திகதிகள்/ கூற்றுகள் X நிரலில் தரப்பட்டுள்ளவற்றுடன் ஏதோ ஒரு வகையிலே தொடர்புபட்டவை. ஆனால் அவை சரியான தொடர் ஒழுங்கிலே தரப்படவில்லை. X நிரலில் உள்ளவற்றை Y நிரலிற்கேற்பச் சரியாக ஒழுங்குபடுத்தும்போது கீழே தரப்பட்டுள்ள **ஐந்து** சேர்மானங்களுள் ஒன்று சரியானதாகும். **சரியான** சேர்மானத்தைத் தெரிவுசெய்து அதன் **இலக்கத்தைப் புள்ளிக் கோட்டில்** எழுதுக.

16.

| | X | | Y |
|---|---|---|---|
| (i) | கங்கை | A | ரூபார் |
| (ii) | யமுனை | B | பிரயாகை |
| (iii) | மகாநதி | C | பாருகச்ச |
| (iv) | நர்மதை | D | தௌலி |
| (v) | சத்லெஜ் | E | இந்திரப்பிரஸ்தம் |

(1) A D C B E (2) B E D C A (3) C A E D B (4) D B A E C (5) E C B A D (......)

17.

| | X | | Y |
|---|---|---|---|
| (i) | இராமாயணம் | A | தண்டி |
| (ii) | இராஜதரங்கினி | B | காளிதாஸர் |
| (iii) | மாளவிகாக்னிமித்ரம் | C | கல்ஹணர் |
| (iv) | தசகுமார சரிதம் | D | ஹர்ஷன் |
| (v) | பிரியதர்ஷிகா | E | வால்மீகி |

(1) A D C B E (2) B E D C A (3) C A E D B (4) D B A E C (5) E C B A D (......)

[பக். 3 ஐப் பார்க்க

18. (i) அந்தர்வாஸிக — A வரிசேர்ப்பாளர்
(ii) மந்திரி - பரிஷத் — B அமைச்சரவை
(iii) சமாஹர்த்தா — C நகரபாலகர்
(iv) அந்தபால — D அந்தரப்புரக் காவலர்
(v) நாகரக — E எல்லைப்புறக் காவல் அதிகாரி

(1) A D C B E (2) B E D C A (3) C A E D B (4) D B A E C (5) E C B A D (......)

| | X | | Y |
|---|---|---|---|
| 19. (i) | மகாபலிபுரம் | A | இரதங்கள் |
| (ii) | மதுரா | B | சுவரோவியங்கள் |
| (iii) | நாலந்த | C | பௌத்த பல்கலைக்கழகம் |
| (iv) | அஜந்தா | D | பௌத்த சிற்பக்கலைப் பாணி |
| (v) | தேவகிரி | E | யாதவர் தலைநகரம் |

(1) A D C B E (2) B E D C A (3) C A E D B (4) D B A E C (5) E C B A D (......)

| | X | | Y |
|---|---|---|---|
| 20. (i) | தோரமான | A | சக - சத்ரப |
| (ii) | நஹாப்பணன் | B | பிரதீஹார |
| (iii) | டெமெற்றியோஸ் | C | ஹூணர் |
| (iv) | ஹுவிஷ்க | D | குஷாணர் |
| (v) | வத்ஸராஜ | E | இந்து - கிரேக்கர் |

(1) A D C B E (2) B E D C A (3) C A E D B (4) D B A E C (5) E C B A D (......)

- **21 - 25** வரையுள்ள ஒவ்வொரு வினாவுக்கும் சரியான விடையைத் தெரிவு செய்து அதற்குரிய **இலக்கத்தைப் புள்ளிக் கோட்டின் மீது** எழுதுக

21. பெரிய குளிப்பறை இருந்த நகரத்தின் பெயரைக் குறிப்பிடுக.
(1) மொஹெஞ்சதாரோ (2) ஹரப்பா (3) ரூபார்
(4) லொதால் (5) கலிபங்கன் (......)

22. சாஞ்சி ஸ்தூபியைக் கட்டியவர் யார் ?
(1) சந்திரகுப்த மௌரியன் (2) அசோகன் (3) விந்துசாரன்
(4) புஷ்யமித்திர சுங்கன் (5) கனிஷ்கன் (......)

23. நான்காம் பௌத்த மாநாட்டின் பின்பு மகாயான சமய நூல்கள் எந்த மொழியில் எழுதப்பட்டுள்ளன ?
(1) பிராமி (2) மாகதி (3) பிராகிருதம்
(4) பாளி (5) சமஸ்கிருதம் (......)

24. எல்லோராவில் உள்ள மலைதளியான (கைலாசநாதர்) கோயிலைக் கட்டிய அரசன் யார் ?
(1) தந்திதுர்க்கன் (2) துருவன்
(3) முதலாம் கிருஷ்ணன் (4) மூன்றாம் கோவிந்தன்
(5) முதலாம் அமோகவர்ஷன் (......)

25. விக்கிரமசிலா பல்கலைக்கழகத்தின் ஸ்தாபகன் யார் ?
(1) முதலாம் கனிஷ்கன் (2) முதலாம் குமாரகுப்தன் (3) ஹர்ஷன்
(4) தர்மபாலன் (5) தேவபாலன் (......)

[பக். 4 ஐப் பார்க்க

0733

● **26 - 30** வரையுள்ள எல்லா வினாக்களுக்கும் ஒரு தலைப்பின் கீழ் **ஐந்து** விடயங்கள் வீதம் தரப்பட்டுள்ளன. அவ்விடயங்களுள் **ஒன்று** உரிய தலைப்பிற்குப் **பொருந்தாதுள்ளது. அப்பொருந்தாததைத்** தெரிவு செய்து அதன் **இலக்கத்தைப் புள்ளிக் கோட்டின் மீது** எழுதுக.

26. **சிந்துவெளி நாகரிகத்தின் அழிவுக்கான காரணங்கள்**
(1) ராவி ஆற்றுப்படுக்கையில் ஏற்பட்ட மாற்றம்.
(2) அடிக்கடி ஏற்பட்ட வெள்ளப்பெருக்கு.
(3) தார் பாலைவனத்திலிருந்து வீசிய மண்மாரி.
(4) அந்நியப் படையெடுப்பாளரின் தாக்குதல்கள்.
(5) குடித்தொகைப் பெருக்கம். (......)

27. **மகத இராச்சியத்தின் எழுச்சிக்கும் வளர்ச்சிக்கும் ஏதுவான காரணங்கள்**
(1) இராச்சியத்தினதும் அதன் இராசதானியினதும் புவிசார் அமைவிடம்.
(2) விவசாயம், வாணிபம் அபிவிருத்தியடைந்தமை.
(3) அதன் மன்னர்களின் கட்டுப்பாடுள்ள இராணுவம்.
(4) வளங்கள் பெருகியிருந்தமை.
(5) அயலில் அமைந்திருந்த கணராச்சியங்களின் ஆதரவு (......)

28. **அர்த்த சாஸ்திரம்**
(1) சந்திரகுப்த மௌரியனின் பிரதான ஆலோசகரான கௌடில்யர் அதனை எழுதினார் என்று நம்புவர்.
(2) அது சமஸ்கிருத மொழியில் எழுதப்பட்டுள்ளது.
(3) மோரிய நிர்வாக முறையை அது விரிவாக விபரிக்கின்றது.
(4) அரசியல் பற்றிப் புராதனகால இந்தியாவில் எழுதப்பட்ட நூல் இது ஒன்றுமட்டுமே ஆகும்.
(5) அது மக்கியாவலியின் அரசன் என்ற நூலுடன் ஒப்பிடப்படும். (......)

29. **சமுத்திரகுப்தன்**
(1) அசோகனுடைய தூணில் எழுதப்பட்ட அல்லாகாபாத் பிரசஸ்தி சமுத்திரகுப்தனைப் பற்றிய விபரங்களைப் பற்றிக் கூறும் ஆவணங்களிலே மிக முக்கியமானது.
(2) அவனுடைய முதலாவது படையெடுப்புக்கள் நாக அரசருக்கு எதிரானவை.
(3) அவற்றுக்கு அடுத்த படையெடுப்பு தென்னிந்திய அரசர்களுக்கு எதிரானது.
(4) அவன் தனது போர்களை முடித்த பின்பு அஸ்வமேத யாகம் செய்தான்.
(5) 'நவரத்தினங்கள்' என்று சொல்லப்படும் கவிஞர்களைச் சமுத்திரகுப்தனுடைய இராசதானியில் நன்றாக ஆதரித்தனர் என்று நம்பப்படுகிறது. (......)

30. **சோழ நிர்வாகம்**
(1) சோழ நிர்வாகத்தின் மிக முக்கியமான அம்சம் அதன் உள்ளூராட்சி முறையாகும்.
(2) சோழரின் நகராட்சி முறை பற்றிய பிரதானமான விபரங்கள் சங்க இலக்கியத்திற் காணப்படுகின்றன.
(3) அரசனே சோழ நிர்வாகத்தின் அதிபதியாவான்.
(4) அரசனுடைய ஆட்சியின் கீழ் அமைந்த நிலப் பகுதிகள் மண்டலம் என்னும் மாகாணங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தன.
(5) மண்டலங்களில் வளநாடு, நாடு என்னும் உப பிரிவுகள் இருந்தன. (......)

[பக். 5 ஐப் பார்க்க

● **31 - 35** வரையுள்ள ஒவ்வொன்றுக்கும் **(A), (B), (C), (D)** என்னும் நான்கு மாற்று விடைகள் தரப்பட்டுள்ளன. அவற்றுள் **ஒன்று** அல்லது **பல** சரியான விடைகளாகும். சரியான விடையை அல்லது விடைகளைத் தெரிவு செய்து

(A) யும் (B) யும் மட்டும் சரியாயின் ............ 1 எனவும்
(B) யும் (C) யும் மட்டும் சரியாயின் ............ 2 எனவும்
(C) யும் (D) யும் மட்டும் சரியாயின் ............ 3 எனவும்
(A) யும் (C) யும் மட்டும் சரியாயின் ............ 4 எனவும்

**ஒரு** விடை மட்டும் அல்லது **இரண்டிற்கு** மேற்பட்ட விடைகள் சரியாயின் ............ 5 எனவும் **புள்ளிக் கோட்டில்** எழுதுக.

| அறிவுறுத்தல்களின் சுருக்கம் | | | | |
|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 |
| (A) யும் (B) யும் மட்டும் சரி | (B) யும் (C) யும் மட்டும் சரி | (C) யும் (D) யும் மட்டும் சரி | (A) யும் (C) யும் மட்டும் சரி | ஒரு விடை மட்டும் அல்லது **இரண்டிற்கு** மேற்பட்ட விடைகள் சரி |

31. **கங்கை, சிந்து நதி சமவெளிகள்**
(A) மண் மிக வளமுடையதால் அந்தப் பகுதியில் பெரிய பேரரசுகளை அமைக்க முடிந்தது.
(B) அதன் செல்வ வளத்தாற் கவரப்பட்டு, அந்நியர்கள் இந்தியா மீது படையெடுத்தனர்.
(C) எல்லைப் புறங்கள் முறையாகப் பாதுகாக்கப்படாமையால் அந்நியர்கள் வட இந்தியாவைக் கைப்பற்ற முடிந்தது.
(D) செல்வ வளம் காணப்பட்டதால் மக்கள் தத்துவவிசாரம், பண்பாட்டு முயற்சிகள் ஆகியவற்றில் ஈடுபட அவகாசம் கிடைத்தது. (......)

32. **மெகஸ்தினிஸ்**
(A) சந்திரகுப்த மௌரியனின் அரண்மனைக்கு வந்த முதலாவது கிரேக்கத் தூதுவர் ஆவார்.
(B) அலெக்ஷாந்தர் இந்தியாவிலிருந்து திரும்பிச் செல்லமுன் அவரைப் பாடலிபுரத்திற்கு அனுப்பினான்.
(C) மெகஸ்தினிஸ் எழுதிய இந்திக்கா என்னும் நூலில் இந்திய மக்களின் வாழ்க்கை பற்றிய விபரங்கள் சொல்லப்படுகின்றன.
(D) சந்திரகுப்தனுக்கும் அலெக்ஷாந்தருக்கும் இடையில் ஓர் உடன்படிக்கையை ஏற்படுத்திக்கொள்ள முடிந்தது.

33. **கனிஷ்கன்**
(A) விமகடபிசனின் பின்பு கனிஷ்கன் அரச பதவி பெற்றான்.
(B) அவனுடைய ஆட்சிக்காலத்திற் சீனா வரை உள்ள தேசங்களிற் பௌத்த சமயத்தைப் பரப்புவதற்குப் பௌத்த சங்கத்தாரை அனுப்பினார்கள்
(C) மதுரா அவனது இராச்சியத்தின் தலைநகராகும்.
(D) நான்காவது பௌத்த மகாநாட்டில் நாகார்ஜுனர் தலைவராக விளங்கினார். (......)

34. **சாளுக்கியர்**
(A) சாளுக்கிய அரச வம்சத்தின் ஸ்தாபகன் முதலாம் கீர்த்திவர்மன் ஆவான்.
(B) சாளுக்கிய அரசர்களை வாதாபிச் சாளுக்கியர், கல்யாணிச் சாளுக்கியர், வேங்கிச் சாளுக்கியர் என மூன்று பிரிவினராக வகை செய்துள்ளனர்.
(C) ஹர்ஷவர்த்தனின் தென்னோக்கிய படையெடுப்பைச் சாளுக்கியர் தடைசெய்தனர்.
(D) எல்லோராவிலுள்ள மலைதளியான கைலாசநாதர் கோயில் சாளுக்கிய மன்னர்களின் ஆதரவில் அமைக்கப்பட்டது.

35. **முதலாம் இராஜராஜன்**
(A) அவன் இலங்கை முழுவதையும் கைப்பற்றினான்.
(B) தென்னிந்தியாவில் ஒரு பலம்பொருந்திய கடற்படையை உருவாக்கினான். கேரள இராச்சியத்தின் கடற்படையை அழித்தான்.
(C) அவன் மதுரையைக் கைப்பற்றியதோடு பாண்டிய அரசனையும் பிடித்துக் கொண்டான்.
(D) வங்காளத்தின் மீது அவன் அடைந்த வெற்றியை நினைவுகூரும் வண்ணமாக ஒரு புதிய இராசதானியை அமைத்தான்.

[பக். 6 ஐப் பார்க்க

● **36 - 40** வரையுள்ள வினாக்களில் இரண்டு கூற்றுகள் வீதம் தரப்பட்டுள்ளன. ஒவ்வொரு வினா தொடர்பாகவும் உள்ள கூற்றுச் சோடிக்குக் கீழே உள்ள அட்டவணையில் காணப்படும் **1, 2, 3, 4, 5** என்பவற்றில் மிகவும் பொருந்துவது எதுவென்பதைத் தெரிந்து **அதன் இலக்கத்தைப் புள்ளிக் கோட்டில்** எழுதுக.

அட்டவணை

| | முதலாம் கூற்று | இரண்டாம் கூற்று |
|---|---|---|
| 1. | சரியானது | பிழையானது |
| 2. | சரியானது | சரியானது |
| 3. | பிழையானது | பிழையானது |
| 4. | பிழையானது | சரியானது |
| 5. | சரியானது | சரியானதும், முதலாம் கூற்றினை நன்றாக விளக்குவதுமாகும். |

| | முதலாம் கூற்று | இரண்டாம் கூற்று | |
|---|---|---|---|
| 36. | காஞ்சிப் பல்லவ மன்னர்களின் ஆதரவிலே சங்க இலக்கியம் இயற்றப்பட்டது. | இராமாயணம், மகாபாரம் ஆகியன குப்தர் காலத்தில் இறுதி வடிவம் பெற்றன. | (……) |
| 37. | அலெக்ஷாந்தர் சிந்து நதியைக் கடந்ததும் தக்ஷசீலத்து அரசனாகிய அம்பி என்பவனின் எதிர்ப்புக்கு முகங் கொடுக்க நேர்ந்தது. | அலெக்ஷாந்தர் யமுனையை அடைந்ததும் அவனுடைய படை முன்னேறிச் செல்ல மறுத்து விட்டது. | (……) |
| 38. | இந்தியாவிலே கிரேக்கரின் முன்னேற்றத்தினைச் சுங்கர் தடைசெய்தனர். | சுங்கர் ஆட்சியில் வைதீக சமயத்தின் மறுமலர்ச்சி ஆரம்பமாகியது. | (……) |
| 39. | ஹூணரைத் தோற்கடித்தமை ஸ்கந்தகுப்தனின் பெருஞ் சாதனையாகும். | ஆனால், ஹூணர் படைக்குத் தலைவனாக இருந்த தோரமானன் அவனது (ஸ்கந்தகுப்தனுடைய) பின்னோனாகிய புருகுப்தனைப் போரிலே தோற்கடித்தான். | (……) |
| 40. | வங்காளத்துப் பாலர்கள் பௌத்த சமயத்தைப் பின்பற்றினார்கள். | பல பௌத்த விகாரங்களை அமைத்த பால மன்னர்கள் விக்ரமசீலா, ஜக்தல என்னம் பல்கலைக் கழகங்களையும் உருவாக்கினார்கள். ஆதீஸ என்னும் பிக்கு பௌத்தம் போதிப் பதற்குத் திபெத் நாட்டிற்குச் சென்றார். | (……) |

**

[பக். 7 ஐப் பார்க்க

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2011 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர(உயர் தர)ப் பரீட்சை, 2011 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2011

ඉතිහාසය II (II කොටස)
வரலாறு II (பகுதி II)
History II (Part II)

25-A | T | II

இந்திய வரலாறு - ஆதி காலம் முதல் கி.பி 1206 வரை

அறிவுறுத்தல்கள்:
※ முதலாம் வினாவுக்கும் வேறு ஏதாவது **மூன்று** வினாக்களுக்கும் விடை எழுதுக.
(முதலாம் ஆம் வினாவுக்கு விடை அளிப்பதற்கு **இந்தியாவின் புறவுருவப் படம்** வழங்கப்படும்).

## பகுதி II

1. தரப்பட்டுள்ள இந்தியப் புறவுருவப்படத்தில் மேல்வரும் **எல்லா இடங்களையும் குறித்துப் பெயரிட்டு**, அவற்றுள் எவையேனும் **இரண்டினைப்** பற்றிச் சுருக்கமான வரலாற்றுக் குறிப்புகள் எழுதுக.
   (i) மக்ரான் (ii) யமுனை
   (iii) ஹரப்பா (iv) கன்னோசி
   (v) மதுரை (vi) உஜ்ஜயினி
   (vii) ஐஹொளே (viii) தாம்ரலிப்தி
   *(சரியாகக் குறித்துப் பெயரிடுவதற்கு 01 புள்ளி ; சிறுகுறிப்பு ஒவ்வொன்றுக்கும் 05 புள்ளிகள்)*

2. சிந்துவெளி நாகரிகத்துச் சமய நம்பிக்கைகள் பற்றி ஒரு கட்டுரை எழுதுக. *(14 புள்ளிகள்)*

3. வேதச் காலத்து சமூக, அரசியல் நிலைகளின் பிரதான அம்சங்கள் பற்றி ஆராய்க. *(14 புள்ளிகள்)*

4. கி.மு. ஆறாம் நூற்றாண்டு வட இந்தியாவின் அரசியல் நிலைகளை விவரிக்குக. *(14 புள்ளிகள்)*

5. "அசோக தர்மம் ஒரு சமயநெறியைக் காட்டிலும் ஒரு ஒழுக்கநெறிபோல அமைந்தது." இக்கூற்றினைப் பரிசீலனை செய்க. *(14 புள்ளிகள்)*

6. பகுதி **(அ) அல்லது (ஆ)** இற்கு மட்டும் விடை எழுதுக.
   (அ) மகாயான பௌத்தத்தின் வளர்ச்சியிற் குஷாணர் கொண்டிருந்த பங்கினை விவரிக்குக.
   (ஆ) தக்கிணத்திலே சாதவாகனரின் ஆட்சியில் நிலவிய சமூக, அரசியல் நிலைகளை ஆராய்க. *(14 புள்ளிகள்)*

7. மேல்வரும் அம்சங்கள் தொடர்பாக இரண்டாம் சந்திரகுப்தனின் சாதனைகளை மதிப்பிடுக.
   (i) படைபலம் கொண்டு நாடுகளைக் கைப்பற்றியமையும் வட இந்தியாவை ஐக்கியப்படுத்தியமையும்
   (ii) கலையும் கட்டடக்கலையும் *(14 புள்ளிகள்)*

8. "ஹர்ஷன் போரிலும் சமாதானத்திலும் சிறந்து விளங்கினான்."
   (i) அவனுடைய வம்சப் பெயரைக் குறிப்பிடுக. *(01 புள்ளிகள்)*
   (ii) ஹர்ஷனுடைய ஆட்சி பற்றிய விபரங்கள் அடங்கிய **இரண்டு** மூலங்களைக் குறிப்பிடுக. *(02 புள்ளிகள்)*
   (iii) அவன் கன்னோஸியில் அரச பதவி பெற்றமை பற்றிச் சுருக்கமாக விளக்குக. *(03 புள்ளிகள்)*
   (iv) அவனுடைய படையெடுப்புகள், சமய பண்பாட்டு நடவடிக்கைகள் என்பனவற்றை அடிப்படையாகக் கொண்டு வினாவிற் குறிப்பிடப்பட்டுள்ள கூற்றினைப் பரிசீலனை செய்க. *(08 புள்ளிகள்)*

9. முதலாம் இராஜேந்திரனைச் சிறப்பாகக் குறித்துச் சோழர்களுடைய போர்ச் சாதனைகளை ஆராய்க. *(14 புள்ளிகள்)*

※※※

